# குமணன்

## கொடைவீரன்

ஸ்ரீ:

பச்சையப்பன் கல்லூரித் தமிழாசிரியர்

மணி. திருநாவுக்கரசு முதலியார்

எழுதியது






கே. பழனியாண்டிப் பிள்ளை கம்பெனி,

திருவல்லிக்கேணி, சென்னை.

 [விலை அ[illegible]



குமணன் தன் தலையைத் துணிக்க வாள் கொடுத்தல்

[பக்கம் 84]

# குமணன்

'சித்திரமுங் கைப்பழக்கம், செந்தமிழும் நாப்பழக்கம்,
வைத்ததொரு கல்வி மனப்பழக்கம்,—நித்தம்
நடையும் நடைப்பழக்கம், நட்புந் தயையுங்
கொடையும் பிறவிக் குணம்.' —அவ்வையார்.

'சாதலின் இன்னாத தில்லை, இனிது அதூஉம்
ஈதல் இயையாக் கடை. —வள்ளுவனார்.

தமிழ் வழங்கும் நாட்டிற்குத் தமிழ் நாடு என்று பெயர்; தமிழகம் என்றும் அது சொல்லப் படும். இத் தமிழகம் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன் இப்பொழுது இருப்பது போல இல்லை. பத்துப் பதினைந்து ஆண்டுகளுக்குள்ளேயே எத் தனையோ மாறுதல்கள் உண்டாகிவிடுகின்றன என்றால் ஈராயிரம் ஆண்டுகளில் எவ்வளவு மாறு பாடுகள் உண்டாகக்கூடும் என்பதை நாம் எண் ணிப் பார்க்கவேண்டும். இப்பொழுது நாம் உண் ணும் உணவுக்கும், நம் முன்னோர் பண்டைக் காலத்தில் உண்ட உணவுக்கும் எத்துணையோ வேற்றுமை உண்டு; நமது உடையும் அவ ருடைய உடைக்கு வேறுபட்டுவிட்டது. வழக் கங்களும் மாறின; ஒழுக்கங்களும் திரிந்தன.

இப்படி எல்லாம் ஒவ்வொரு வகையில் பேதப் பட்டே இருக்கின்றன.

அந்நாளிலே தமிழ் நாட்டை ஆண்டு வந்த அரசர்களில் மிகச் சிறந்தவர் மூவேந்தர்; அவருக்குத்தாம் முடியுடை மன்னர் என்று பேர்; அவர்கள் ஆட்சிக்குக் கீழ்ப்பட்டும், படாமலும் சிற்றரசர் பலர் இருந்தனர். இம்மூவேந்தரும் சேர சோழ பாண்டியர் எனப்படுவர். அவர்கட்குத் தனித்தனியே அடையாளப் பூவும், கொடியும், பரிமாவும் உண்டு. சேரன் அடையாளமாலை பனை; அவன் கொடி வில்; அவன் குதிரைக்குப் பாடலம் என்று பேர். அவன் ஆட்சி செய்த நாடு சேர நாடு என்று வழங்கும். சேர மன்னர் கொடையினால் மிக்க புகழ் பெற்றவர். சோழ வேந்தர் அடையாளமாக ஆத்திமாலையைச் சூடுவர்; அவர் கொடி புலி; அவர்தம் பட்டமாவிற்குக் கோரம் என்று பெயர்; அவர் அரசாண்ட நாடு சோழ நாடு என்றும், அது மருஉவாய்ச் சோணாடு என்றும் கூறப்படும். அவர் அறத்திற் சிறந்தவர். பாண்டியர்க்கு உரியது வேப்பமாலை; அவருக்குக் கொடியாவது கயல் மீன்; அவருடைய குதிரை கனவட்டம் என்பது; அவர் நாடு பாண்டியநாடு, பாண்டிநாடு எனப் பெயர் பெறும். அவர் தமிழ் வளர்த்தமையினால் உயர்வு பெற்றவர்.

இம் மூவரும் தமிழ்ப் புலவர்களுக்கு உண்டியும் உறையுளும் தந்தும், நில நீர்களை வழங்கியும், ஆடை அணிகளை அளித்தும், அவர்கள் வாயில் வரும் சொற்களைப் பொன்னே போல் மதித்தும் வந்தனர். புலவர்களிடம் அவர்கள் காட்டிய நன்கு மதிப்பு இக்காலத்தாருக்கு வியப்பை உண்டுபண்ணும். புலவர்கள் அமைச்சர்களாக இருந்தனர். தூதுவராகச் சென்றனர்; சில வேளைகளில் அரசும் புரிந்தனர். அப்பொழுது கல்வி வளரும் என்று சொல்லவும் வேண்டுமோ? சோறும் கூறையும் செல்வமும் செல்வாக்கும் நிரம்பப் பெற்ற புலவர்கள் தம்மைப்போற்றும் மன்னரைத் தாமும் பாட்டுக்களால் போற்றுவாராயினர். அவ்வாறு பல நூல்கள் எழுந்தன. இம் மன்னரோ 'நான் முன், நான் முன்,' என்று போட்டிப் போட்டுக்கொண்டு பொருள் வழங்கி வந்தனர். இவர்கள் புலவர்களைப் பெரிதும் மதிக்கவே, 'மன்னன் எப்படிமன்னுயிர் அப்படி' என்னும் பழமொழிப்படி எல்லாரும் அவர்களை மதிக்கலாயினர்; அவர்கட்குக் கொடை வழங்கலாயினர்.

இத்தகைய காலத்திலே மன்னர் சிலர் கொடையிலேயே வெறிகொண்டிருந்தனர்; அவர்கட்கு இன்னதுதான் கொடுக்கவேண்டும் என்ற தெரிந்துணர்வு கூட நழுவி விட்டது; தமக்கு

நாளைக்கு வேண்டுமே என்ற எண்ணங்கூட இல்லாமல் எல்லாவற்றையும் கொடுத்துவிடுவர்; தமக்குக் கொடுக்க முடியாத காலத்திலே யாரும் வேண்டாததும், கொடுமை எல்லாவற்றிலும் கொடுமை உடையதுமான சாக்காட்டையும் விரும்புவர். அப்படிப்பட்ட பேரன்பு உடையவர்களுக்கு வள்ளல்கள் என்று பெயர். வள்ளல் என்றால் வரையாது கொடுப்பவர் என்று பொருள். அவர் உள்ள பொருளையெல்லாம் உள்ளம் உவந்து எதிர் ஒன்றும் பாராமல், மழை போலத் தமது அருளைப் பொழிவர். அவர்களுடைய செய்கை இக்காலத்திலே பலருக்குப் பித்துச் செயல் போலத் தோன்றும். அதற்குக் *கொடைமடம் என்றும் அக்காலத்துப் புலவரும் பாடினர். அவர்களுள் சிலருடைய கொடைப் பெருமையை இங்கே எடுத்துக் கூறுகிறேன்; பாருங்கள்!

மலைநாட்டை ஆண்டுவந்த பேகன் என்றொரு அரசன் இருந்தான். அவன் ஒரு காலத்தில் மலைகளின் வளப்பம் மிகுந்த காட்சியைக் காணச் சென்றான். அப்பொழுது மழை 'சோ' வெனப் பொழிந்தது. அதனால் கைகால் நடுங்கவும், பல்பறை கொட்டவும் கடுங்குளிர் உண்டா

*கொடைமடம் என்றால் அறியாமையையுடைய கொடை என்று பொருள்.

யிற்று. அப்பொழுது அம்மன்னன் தனது போர்வையை எடுத்துப் போர்த்துக்கொண்டான். அங்கே மென்மைவாய்ந்த ஆண்மயில் ஒன்று தனது தோகையை விரித்து, அவனுக்கு முன் ஆடிற்று. மயிலுக்கு எப்பொழுதும் மழையில் விருப்பம். அதைக் கண்ட பேகன் தனது குளிர் நடுக்கத்தையும் நினையாது, தான் போர்த்திருந்த



போர்வையை அம்மயிலின் மேல் போர்த்தான். அது அப் போர்வையை உடுத்துக்கொள்ள முடியாதென்பதும் அவனுக்குத் தெரியும். என்றாலும் ஒரு பயனையும் எண்ணாமல் தனது துயரத்தைப் பொறுத்துக்கொண்டு போர்வை கொடுத்த அவனது பேரன்பைப் பாருங்கள்!

பாரி என்னும் பெயரையுடைய வள்ளல் மற்றொருவன் இருந்தான். அவன் பறம்புமலைக்குத் தலைவன் ; கபிலர் என்னும் பெரும் புலவருக்கு உயிர்த் தோழன். அவன் ஒருகால் தேரிலேறிக் கொண்டு காட்டு வழியே சென்றான். அங்கே ஒரு முல்லைக் கொடி படர்வதற்குக் கொழுகொம்பின்றித் தளர்ந்திருந்தது. அதைக் கண்ட அரசன் மனந் தளர்ந்து, அருளோடு தனது பொற்றேரை அங்கே நிறுத்தி, அதன்மேல் கொடிபடரச் செய்துவிட்டுத் தான் நெடுந்தூரம் காலால் நடந்து வருந்திச் சென்றான். 'இவன், வாடிய கொடியைக் கண்டு வாடிய மென்மை எவ்வளவு அழகுடையது காணுங்கள்!

ஆய் என்று புகழ்பெற்ற வள்ளல் வேறொருவன் இருந்தான். அவன் வேளாளன் ; இன்சொல்லே இயல்பாக உடையவன் ; அவன் புலவருக்கு யானைகளையும் தேர்களையும் குதிரைகளையும் ஈந்தான். கடையில் தன்னிடம் வரும் இரவலருக்குக் கொடுக்கப் பொருளின்றிக் கைவறண்டு போயினான். அவன் தன் மனைவியின் அணிகலங்களையும் பிறருக்கு உதவ அவள் கழுத்திலே மங்கிலியம் ஒன்றே எஞ்சியிருந்தது. இந்நிலையில் ஆய், நீல நாகத்தை வழிபட, அது அவனுக்குக் கற்பகம் போலச் செல்வம் சுரக்கச் செய்வதாகிய ஒரு தூய ஆடையை அளித்தது. அத

னைப் பெற்ற வேள் திரும்பித் தனது அரண்மனைக்கு வருகையில், வழியிலே சிவபெருமான் திருக்கோயில் ஒன்றைக் கண்டான்; கண்டதும் அதைக் கைகூப்பித் தொழுது அதனுள்ளே புகுந்தான்; அங்கே அப்பெருமான் ஆடையின்றி இருத்தலைக் கண்டு, மனம் வெதும்பிக் கண்ணீர் சொரிந்து, தான் பெற்ற கலிங்கத்தை அவர் திருமேனியிலே சாத்தி மகிழ்ந்தான் அவ்வற்புத ஆடையின் பெருமையையாவது தனது வறுமையையாவது ஒரு சிறிதும் எண்ணவேயில்லை. இவன் கொடையின் அருமையை நோக்குங்கள்!

அதியமான் என்று கீர்த்தி பெற்ற வள்ளல் இன்னொருவன் உண்டு. அவன் நம் தமிழ் மூதாட்டியராகிய அவ்வையாருக்கு ஆருயிர் நண்பன். அவனுக்கு ஒரு காலத்தில் சாவாத வாழ்வைத் தரக் கூடிய தேவாமிர்தம் போன்ற கருநெல்லிக் கனி கிடைத்தது. அவ் வருமையான கனியை அவன் தான் உண்ணுமல் அவ்வையாருக்குக் கொடுத்து விட்டான். அப்படிக் கொடுத்த அவன் அப்பழத்தின் அருமையை முதலில் அவ்வையாருக்குச் சொல்லவே யில்லை; சொன்னல், அவர் ஒரு வேளை மறுத்து விட்டாலும் விடுவார் என்ற அச்சம் அவனுக்கு உண்டாயிற்று. இதனல் அவன் உள்ளத்தின் விரிவு நன்ருகப் புலப்பட வில்லையா!



இனிக் கண்டீரக்கோ பெருநள்ளி என்னும் வள்ளல் ஒருவரைப் பற்றி மட்டும் சொல்லிவிட்டு நமது கதையின் மேற் செல்லலாம். இவன்

தோட்டி என்னும் மலை நாட்டிற்குத் தலைவன். வன்பரணர் என்னும் அருட்புலவர் ஒருவர் இருந்தார். அவர் வேற்று நாட்டுக்குத் தம் மனைவி மக்கள் சுற்றத்தாரோடு சென்றார். அவர் கையிற் கொண்டு போன பொருள் எல்லாம் செலவழிந்து விட்டன; அவருக்கு உடுக்க நல்ல உடையும் இல்லை. அவர் கரிய கந்தை ஆடையைச் சுற்றிக் கொண்டு, காலோய்ந்து நடந்து ஒரு காட்டிலே வந்தார்; அங்கே பலாமரத்தின் அடியிலே சிறிது நேரம் இளைப்பாறினார். அப்பொழுது காட்டிலே மான் வேட்டை ஆடி, நள்ளி வில்லுடன் அங்கே வந்தான். அவனைக் கண்டதும் புலவர் இன்னானென்றறியாமலே அஞ்சலி பண்ணி எழுந்தார். அவரை அவன் உடனே கைகவித்து இருத்தி, அவருடைய வறுமையையும், வழி நடந்த வருத்தத்தையும் பார்த்து மனம் உருகினான். அங்கு அப்பொழுது ஏவலாளர் ஒருவரும் இல்லை. எல்லாரும் வேட்டை ஆடுகையில் வழிதப்பிப் பிரிந்தனர். அவர்கள் வருகிறவரையில் பொறுத்திருக்க அரசனுக்கு முடியவில்லை. அதனால் அவன் தனக்கு வேட்டையினால் ஏற்பட்ட இளைப்பையும் கவனிக்கவில்லை; தானே தனது திருக்கைகளால் கடிதாகத் தீயைக் கடைந்தான்; தன்னால் கொல்லப்பட்ட மானினது கொழுமையான ஊனைச் சுட்டுப் புலவரிடம் போந்து, "தாங்கள் தமது

சுற்றத்துடனே இதனைத் தின்பீராக", என்று இனிமையாகக் கூறினான். அவர்களும் அதை



அமிழ்தைப் போலத் தின்று சுடுபசி தீர்ந்தனர். அதன்மேல் அமரஞ் செறிந்திருந்த மலைச்சாரலிலே உச்சி மலையிலிருந்து வீழும் பளிங்கை

ஒத்த வெண்மையான இனிய அருவி நீரை அள்ளிக் குளிரக் குடித்துத் தாகந் தீர்ந்தார். அப்பால் அவர் நள்ளியிடம் செல்வதற்கு விடை கொள்ளத் தொடங்கினர். உடனே அவ்வருளாளன் அவரிடம் விரைந்து வந்து, "ஐயா, இப்பொழுது நான் காட்டு நாட்டிலே இருக்கின்றேன்; நல்ல ஆபரணங்களும் கொடுப்பதற்கு இல்லை; என் செய்வேன்!" என்று வருந்தித் தனது மார்பிலே அணிந்துள்ள முத்துவடங்களை யுடைய ஆரத்தையும், முன்கைக் கடகத்தையும் கழற்றித் தந்தான். அவற்றைப் பெற்றுக்கொண்ட புலவர் அவனைப் பார்த்து, "வள்ளலே, தமது நாடு யாது? தமது திருப்பெயர்யாது?" என்று கேட்க, அவன் அவை ஒன்றும் சொல்லாது விடை கொடுத்துச் சென்றான். இப்பெரியோனுடைய உள்ளம் அவன் அரசாண்டமலையினும் பெரிய தல்லவா! அவன் அப்போது செய்த உபகாரம் இந்தப் பூமியினும் பெரிய தல்லவோ!

இப்படிப்பட்ட வள்ளல்களைப் போலவே குமணன் என்னும் கோமகன் ஒருவனும் இருந்தான். அவன் வரலாற்றைத்தான் நாம் எடுத்துக் கொண்டது; அதைச் சிறிது விரிவாகப் பேசுவோம்.

குமணன் நற்குணமே ஓர் உருவெடுத்தாற் போன்றவன்; இன் சொல்லே பேசும் இயல்பு

வாய்ந்தவன் ; பிறர் துன்பம் காணாத பேரருளாளன் ; உயிர்களிடத்தே உண்மையன்பு பூண்டவன் ; புலவருக்குப் பொன்மாரி பொழியும் வள்ளல் ; அவனுடைய இனிய அழகிய செந்தாமரை முகமும், பரந்த நெற்றியும், அகன்ற மார்பும், மலைபோலப் பருத்த தோள்களும், நீண்ட அன்பு ததும்பும் விழிகளும் பார்ப்பவர் மனங்களைப் பற்றி இழுக்கும். அவன் முதிர மலைக்கும் அதனைச் சார்ந்த நாட்டுக்கும் தலைவன். அம்மலையிலே மூங்கில் செழித்து வளர்ந்திருக்கும்; சுரபுன்னை மரங்கள் அடர்ந்திருக்கும்; வேர்ப் பலாப் பழம் வெடித்துத் தேனை வடிக்கும். மத்தளங்களைத் தொங்கவிட்டாற்போல விளங்கும் முள்ளையுடைய பலாப் பழத்தைக் கடுவன் பெற்று, உடன் உண்பதற்கு மந்தியைக் கைக்குறி காட்டி அழைக்கும் ; இன்சுவையை யுடைய அருவி நீர் 'சிலு சிலு' வென்று எங்கும் ஓடிக் கொண்டிருக்கும்.

இத்தகைய கோமானுக்குத் தம்பி ஒருவன் இருந்தான் ; அவன் பெயர் இளங்குமணன் ; சிலர் அவனை அமணன் என்றும் அழைப்பர் ; அவன் உடன் பிறந்தே கொல்லும் நோயை ஒத்தவன் ; அவன் அமுதும் நஞ்சும் ஒன்றாகத் தோன்றினாற் போலவும், சீதேவியும் மூதேவியும் உடன்பிறந்தார்களானது போலவும் அருமை

பொருந்திய குமணனோடு உதித்தான். அவனுக்குத் தருமமே பகை; அதருமமே நன்றதாய். அண்ணனுக்கும் அவனுக்கும் ஏழுபொருத்தம். 'அல்லாத மாந்தர்க்கு அறங்கூற்றம்,' என்ற பெரியோர் வாக்கு உண்மையல்லவா? அவன் தமயன் செய்துவரும் தருமத்தையும், தானத்தையும் முற்றும் வெறுத்தான். அவன் மனம் முதிர மலைக் கல்லினும் வலியது. குமணன் புகழ் வளருந்தோறும் இளங் குமணன் பகையும் உடன் வளர்வதாயிற்று.

குமணனே வறியவருக்கும் புலவருக்கும், பாணருக்கும் கூத்தருக்கும் வாரி வாரி வழங்குவதையே பொழுது போக்காகவும், இன்பமாகவும் கருதி வாழ்ந்துவந்தான். அவனிடம் ஒருநாள் பெருஞ்சித்திரனார் என்னும் ஒரு புலவர் சென்று, 'கூர்வேற் குமண வேந்தே, என் நிலைமையைக் கேட்பாயாக. என்னைப் பெற்ற தாய் கையிற் கொண்ட கோலையே காலாக உடையவள்; கண் பார்வை மறைந்தவள்; நூலை விரித்தாற் போன்ற மயிரை உடையவள்; தள்ளாடித் தள்ளாடி நடப்பவள்; வயது சென்றவள். அவளோ உண்பதற்கின்றி இருக்கும் நிலையையால், 'நான் என்று சாவேன் - என்று சாவேன்,' என்று வாழ்க்கையை வெறுத்திருக்கின்றாள். எனக்கு வாழ்க்

கைப்பட்ட மனைவியோ உடம்பு பசந்து, பல சிறு பிள்ளைகள் துன்பப் படுத்துதலால் வருந்தி இளைத்தவள்; அன்றியும் அவளுக்கு உண்ண உணவில்லாமையால் குப்பையிலே முளைத்த முதிராத கீரையைப் பறித்துக் கொண்டு வந்து, உப்பின்றித் தின்றும், பல நாள் உண்ணாமலும் இருக்கின்றாள். அவள் உடுத்திருக்கும் உடையோ அழுக்குப் படிந்து கிழிசலாக இருக்கின்றது. என் புதல்வன் பாலில்லாத மார்பைச் சுவைத்துச் சுவைத்து அழுது, கூழ்ப் பானையையும், சோற்றுப் பானையையும் சுட்டிக் காட்டினான்; அவற்றை என் மனைவி அவனுக்குத் திறந்து காட்ட, அவற்றுள் ஒன்றும் இல்லாமையைக் கண்டு மேலும் மேலும் அழுதான். அவன் அழுகையை அடக்கவேண்டி, என் மனையாள், 'புலி வருகிறது-புலி வருகிறது,' என்று அச்சங் காட்டியும் அவன் அடங்கவில்லை. அதன்மேல் வானத்தைக் காட்டி, 'அம்புலியைப் பார்! அம்புலியைப் பார்!' என்று அவள் பாராக்குக் காட்டியும் அவன் வருத்தந் தணியாமல் இருக்கின்றான். இவ்வெல்லாருடைய வருத்த முந்திர எனக்கு மிக்க பரிசில் அருள் செய்வாயாக,'' என்று ஒரு பாட்டுப் பாடினார். அவருக்கு உடனே குமணவள்ளல் மிக்கபொருளை வழங்கி, வறுமை இனித் தலைகாட்டாதபடி செய்தான்.

பின் ஒரு முறை இப்புலவர் வெளிமான் என்ற சிற்றரசனைப் பாடினார். அவன் அப்போது தூங்கிக்கொண் டிருந்தமையால், தன் தம்பியை அழைத்துப் புலவருக்குப் பரிசில் கொடுக்கக் கூறினான். அவனோ சிறிது பொருள் வழங்க வந்தான். அதனைப் புலவர் வேண்டாமென மறுத்துவிட்டுக் குமணனிடம் வந்து அவனைப் பாடினார். அவன் உடனே ஒரு யானையைக் கொடுத்தான். அதைக் கொண்டுபோய் வெளிமானூரிலே கடிமரத்திலே கட்டிவிட்டு அவனைப் பார்த்து, 'நீ இரவலரைப் பாதுகாக்க மாட்டாய்; ஆனால், இரவலரைக் காப்பாற்றுவார் பலர் இருக்கின்றனர்; இரப்போருக்குப் பெருந்தன்மை உண்டு என்பதை என்னால் தெரிந்துகொள்; நான் பெற்ற பரிசில் இவ்வியானை,' என்று சொல்லி அதைவிட்டுப்போய்விட்டார். இதனால் குமணன் புலவர்க்குத் தாய் போலச் சுரந்த அன்புடையவனாய் இருந்தானென்பது தெரிகின்றது அல்லவா! குமணன் கொடையைப் பற்றி இதைவிட வேடிக்கையான சிறு கதை ஒன்றுண்டு. அதைக் கூறுகிறேன் கேளுங்கள்:

அக்காலத்திலே ஏழை ஒருவன் இருந்தான்; அவன் கற்றதெல்லாம் அரிச்சுவடியே; எழுத்துக் கூட்டிக் கூட்டித் தட்டித் தடுமாறிப் படிப்பான் ; அவன் கையெழுத்தோ ஒவ்வொன்றும் யானைத்

தலைபோல் இருக்கும்; 'உழுகிற காலத்திலே ஊர் திரிந்துவிட்டு அறுக்கிற காலத்தில் வந்தால் என்ன கிடைக்கும்?' என்னும் பழமொழிப்போலப் படிக்கிற காலத்தில் பராக்குப் பார்த்தவன். உபாத்தியாயர், 'எல்லாம் நுழைந்ததா,' என்று கேட்ட போது, எலி வளையில் நுழைவதைப் பார்த்திருந்துவிட்டு, 'வால்மட்டும் நுழையவில்லை,' என்றவனுக்கு இவன் தமயன். இவனுக்கு இவன் தாய், 'காக்கைக்கும் தன் குஞ்சு பொன் குஞ்சு,' என்றபடி தன் தம்பியோடு வாதாடி வழக்குரைத்து உறவு கொண்டாடி, அவன் பெண்ணை மணஞ் செய்து வைத்துவிட்டாள். அப் பெண்ணோ சிறிது கல்வி வாசனை உடையவள். அவள் ஒரு நாள் அவனைப் பார்த்து, "எல்லோரும் நம் மன்னவனிடம் பரிசு பெற்று வருகிறார்களே! படிப்பிருந்தால் தாங்களும் பாடிப் பொருள் பெற்றுச் சுக ஜீவியாக வாழலாமே!" என்றாள். அதைக் கேட்ட அவ்வேழை தன் மனைவிக்கு ஒன்றும் சொல்லாமல் எழுந்து போனான்; ஒரு பனையோலையை வாரி எடுத்துக்கொண்டான்; எழுத்தாணியைக் கூராகத் தீட்டிக்கொண்டான். 'இன்று எப்படியாவது நாலடி வெண்பா ஒன்று பாடி அரசனைப் பார்ப்பேன்,' என்று துணிந்து கொண்டான்; அங்கும் இங்கும் திரிந்தான்; பாட்டு எங்கே இருக்கிறதென்று தெரியவில்லை

சுற்றிச்-சுற்றிப் பார்த்தான்; விழித்தான்; தன்னை நொந்து கொண்டான். 'அவர்கள் மாத்திரம் எங்கேயிருந்து பாடல்களைக் கொண்டு வருகிறார்கள்,' என்று எண்ணினான். 'அது எங்கேயாவது மரத்தில் காய்த்துத் தொங்குகிறதா' என்று மரங்களை யெல்லாம் பார்த்தான். 'ஓகோ! அவர்கள் புதையல் எடுக்கிறார்கள்,' என்று எண்ணி மண்ணைக் கிளறி நிலத்தைத் தோண்டிப் பார்த்தான். கல் வந்ததே யன்றிச் சொல் வந்த பாடில்லை. இவன் கண்களுக்குத் தேமாவும், புளிமாவும் காணப்பட்டனவன்றிச் சீர் காணப்பட வில்லை. இவனுக்கு அரியானையாகிய யாப்பே அலங்காரம். என்ன செய்வான் பாவம்! கல்லாது நீண்ட இவன், தான் பாட்டுப் பாடப் போன கொள்ளையை யாருக்கும் சொல்லாமல் போகலாமென்று எண்ணித் திரும்பினான். அங்கே 'கழுதை கெட்டால் குட்டிச் சுவர்,' என்பது போல ஒரு குட்டிச் சுவர் இருந்தது. படிக்காத நெடுஞ் சுவராகிய இவன் அதைப் பார்த்தான். அங்கே ஒரு எருமைக் கடா அந்தச் சுவரை முட்டிக் கொண்டும், முரணிக் கொண்டும் இருந்தது. இந்த எருமைக்கு அது அருமையாகத் தோன்றிற்று. அதையே உற்றுப்பார்த்துக் கொண்டிருந்தான். அது இவனைப் பார்த்தது. உடனே அவன் எழுத்தாணியால் ஓலையில், 'நீ பார்க்கிறதும்'

என்றெழுதிக் கொண்டான். கொஞ்ச நேரத்துக்குப் பின் அது கொம்பைச் சுவரிலே தேய்த்தது. உடனே அவன், 'நீ தேய்க்கிறதும்,' என்றெழுதினன். பிறகு அது விழித்தது. உடனே அரிச்சுவடிப் புலவன், 'நீ முழிக்கிறதும்' என்றெழுதினன். அதன் மேல் எருமை ஒன்றும் செய்யவில்லை. முன்போலவே பல முறை செய்து கொண்டிருந்தது. எருமைக் கடாவினிடத்திலே பாட்டிருப்பதாகக் கண்ட ஏழை மூன்று முறை அவற்றையே திருப்பித் திருப்பி எழுதிக்கொண்டு, கடைசியாக தனது சொந்த சரக்காக, 'எனக்குத் தெரியும்,' என்பதையும் கூட்டிப் பாட்டை முடித்தான். அப்போது பாட்டுப் பின் வருமாறு உருப்பட்டது.

'நீ பார்க்கிறதும் தேய்க்கிறதும்
முழிக்கிறதும் எனக்குத் தெரியும்;
நீ பார்க்கிறதும் தேய்க்கிறதும்
முழிக்கிறதும் எனக்குத் தெரியும்;
நீ பார்க்கிறதும் தேய்க்கிறதும்
முழிக்கிறதும் எனக்குத் தெரியும்.'

இதை மிகவும் மகிழ்ச்சியோடு எடுத்துக்கொண்டு, அவ்வேழை குமணனைக் காணச் சென்றான். குமணன் புழைக்கடை வாயிலிலே நின்று கொண்டிருந்தான். அவ்வேழை அங்கே ஓடிச் சென்று அரசனை வணங்கி நின்றான். குமணனோ எப்

பொழுதும் யாருக்கும் பேட்டி கொடுப்பவன். ஆதலால் குமணன் அவன் வந்த காரணத்தைக் கேட்டான். ஏழை உடனே தனது பாட்டைப் பாடிக் காட்டினன். எருமைக் கடா விஷயத்தை எடுத்துப்பொருளும் உரைத்தான். குமணவள்ளல் அவன் கல்வி, செல்வம் இரண்டிலும் ஏழையாய் இருப்பதைப்பார்த்து மனமுருகி, அவ்வோலையை அங்கே கூரையின் மேல் செருகிவிட்டு, அவனுக்கு வேண்டிய பொருளை வழங்கி அனுப்பினன். அப் பொருளைப் பெற்ற ஏழை, மனைவியிடம் சென்று நடந்ததையெல்லாம் சொன்னன். எல்லாரும் வயிறு புண்படச் சிரித்தார்கள்; குமணவள்ளலின் உதார குணத்தை வாயார வாழ்த்தினர்கள்.

இவ்வாறு பல நாட்கள் சென்றன. இளங் குமணனே எப்படியேனும் தமயனை முடித்துவிட வேண்டுமென்று துணிந்தான். அதனல் அவன் சூழ்ச்சிகள் பல செய்துவந்தான். ஒன்றும் பலிக்க வில்லை. அதன்மேல் அவன் தன் தமயனுகிய அரசனுக்கு மயிர் வினைத்தொழில் செய்யும் நாவி தனை ஒரு நாள் அழைத்து, அவனிடம் மறை வாய், "நீ அரசன் கழுத்தை அற்றம் நோக்கி அரிந்துவிட வேண்டும்; தப்பினல் உன் தலை தப் பாது; இதை நீ யாருக்காவது செப்பினலும் உயிர் போம்; கருமத்தை முடித்தால் உன் ஏழு தலை முறையும் செல்வத்திலே திளைத்து வாழ

லாம்," என்றான். நாவிதன், "அந்தோ! இத்தீவினைக்கு என்ன செய்வேன்? நான் அவ்வளவு திறமையுடையவன் அல்லவே; சாமி, வேறு யாரைக்கொண்டாவது இச்காரியத்தை முடிப்பித்துக்கொள்ளுங்கள்; நானும் அகப்பட்டுக்கொண்டு தங்களையும் காட்டிக்கொடுப்பதால் என்ன பயன்? ஐயோ, நான் குழந்தை குட்டிக்காரன்; என் தாய் வயது சென்றவள்; என் பெண்டாட்டி இளையவள்," என்று பலவாறு அரற்றிக் 'கோ'வெனக் கதறி அழுதான்.

அப்போது அமணன், அவன் வாயைத் தன் கையாற் பொத்திக் கழுத்தை நெரித்து, "அடே மடையா, மூடு வாயை; இப்பொழுதே இவ்வாளால் உன்னைத் துணித்து யமலோகம் சேர்ப்பேன்," என்று கைவாளை உருவினான். அதைக் கண்ட அப்பட்டன், "ஐயையோ! இல்லை இல்லை; சொல்கிறபடி செய்வேன்; ஆனால் அச்சமாய் இருக்கிறதே; அவரும் உத்தம ராயிற்றே!" என்றான். அமணன், "அடே, அவர் உத்தமராக இருப்பதால்தான் பயப்படவேண்டாம் என்று சொல்லுகிறேன். இல்லாவிட்டால் நான்தான் துணிவேனோ? நீ அப்படியே அகப்பட்டுக் கொண்டு அவருக்கு உண்மை தெரிந்துவிட்டாலும், அவர் உன்னை ஒன்றும் செய்யமாட்டார். இதற்குக் காரணமாகிய என்னைத் தண்டிக்க

வேண்டும். அவரோ அது செய்யமாட்டார் என்பது எனக்கு உறுதியாகத்தெரியும். வேலையை மட்டும் திடமாகவும், திட்டமாகவும் முடித்தால் நல்ல வாழ்வு உண்டு,' என்று அவனைத் தட்டிக் கொடுத்தான். நாவிதன் அப்படியே செய்வதாக அமணனிடம் ஒப்புக் கொண்டான். இளங் குமணன் தனது சூழ்ச்சி நிறைவேறிற்று என் றெண்ணி மகிழ்வுடன் சென்முன்.

அப்பால் மயிர் வினைஞன், "ஐயோ ! இக் கொடுமைக்கு என்ன செய்வேன் ! ஓ தெய்வமே, என்னையோ இப்பாவத்திற்கு ஆளாக்கினீர்! நான் ஏழை; எளியவன். தருமதேவதையாகிய மன்ன வன் கழுத்தை அரியவும் மனம் துணியுமா ! என் வீட்டில் எரிவது அவர் விளக்காயிற்றே ! நான் உண்பது அவர் சோறு ஆயிற்றே ! நான் உடுப் பது அவர் கூறையாயிற்றே ! ஊரைவிட்டு ஓடி விடலாமென்முலும் அரசர் என்னை அழைத்து வந்து காரணம் கேட்பாரே ! இப் பெருப்பாவியும் சும்மா விடமாட்டானே !" என்று பலபடி தன் மனத்திற் சிந்தித்துக் கடைசியில் அத் தீச்செய லுக்குத் துணிந்து சமயம் பார்த்திருந்தான்.

உலகத்திலே மேலானவர்கள் கீழான காரி யத்தைச் செய்யத் துணிந்தால் மற்றவர்கள் என்ன செய்ய மாட்டுவார்கள்! இப்பொழுது இந் நாவிதன் நிலைமையைப் பாருங்கள்! அவன்

செய்தாலும் பாவம்! செய்யாவிடினும் துன்பம்; இருதலைக் கொள்ளி எறும்புபோலானான். கல்வி, செல்வம், அதிகாரம் உடையவர்கள் தீமை செய்யா திருப்பார்களானால் உலகத்தில் பாவம் குறைந்துபோகும். வேலியே பயிரை மேய்ந்தால் அதற்கு வேலி அமைக்கலாமா? இப்படிப் பலநாள் சென்றன. குமணனே அப்பட்டனை அடிக்கடி தூண்டிக்கொண்டு வந்தான்.

கடைசியாக ஒரு நாள் உறுதியாயிற்று. நாவிதன் தனது தீவினையைச் செய்யத் தளராமல் இருந்தான். அரசனும் க்ஷவரம் செய்துகொள்ள அமர்ந்தான். நாவிதன் வேந்தன் தலையை அண்ணாந்திக் கொண்டையிடம் கூரிய கத்தியைச் செலுத்தத் தொடங்கினான். அவன் கை நடுங்கிற்று; நெஞ்சு துடித்தது; குமணனைப் பார்ப்பான்; கத்தியைத் தேய்ப்பான்; பின் விழிப்பான்; ஒன்றுந் தோன்றாது திகைப்பான். இங்ஙனம் பன்முறை அவன் செய்யும்பொழுது அண்ணாந்து கூரையை நோக்கியிருந்த மன்னவன் கண்களுக்குப் பெரிய தாளிப்பனை ஏடு ஒன்று தென்பட்டது. அப்பனை ஓலையிலே பெரிய பெரிய எழுத்துக்கள் காணப்பட்டன. அதில் எழுதப்பட்டிருப்பது யாதென்று உற்றுப் பார்த்து, அரசன் உரக்கப் படித்தான். அதில் உள்ளபடி அரசன், 'நீ பார்க்கிறதும், தேய்க்கிறதும் முழிக்கிறதும் எனக்குத்தெரி

யும்,' என்று படித்து அப்பாட்டைப் பாடியவன் சொல் ஞாபகத்துக்குவர அவன் 'குலுக்'கென்று நகைத்தான். அப்பட்டன் அரசனுக்குச் செய்தி தெரிந்துவிட்டதென்று எண்ணி விலவிலத்தான்; கத்தியை எறிந்தான்; அப்புறம், "சாமி, சாமி" என்று கதறிக்கொண்டு காலில் விழுந்தான்; "என்னைக் காப்பாற்றவேண்டும்; எனக்கு உயிர்ப் பிச்சை கொடுக்கவேண்டும்," என்று சொல்லிப் பூமியிலே விழுந்துகிடந்தான். மன்னவன் ஏதோ உளவிருக்கிறதென்று அறிந்து அவனைத் தனது நீண்டகையால் பிடித்தெழுப்பி, நடந்தவைகளை எல்லாம் கூறும்படி கேட்டான். அவனும் ஆதியோடந்தமாய்க் குழறிக் குழறிக் கூறினான். அதுபொழுது கோமகன், "நல்லது நீ போ; தம்பியிடம் 'இன்று சமயம் வாய்க்கவில்லை' யென்று சொல்லிவிடு. உன் உயிருக்குக் கேடு வராமல் நான் பார்த்துக்கொள்வேன்," என்று சொல்லி அனுப்பி விட்டான்.

பின் அரசன் தனக்குள், "இவ்வுலக வாழ்வோ புல்லின் நுனிமேல் இருக்கும் பனியைப் போலவும், நீர் மேலே தோன்றும் குமிழி போலவும் நிலையற்றது. பனித் துளி சூரியன் கதிர் பாய்கின்ற வரையில் எவ்வளவு அழகாகவும் முத்துப் போலவும் விளங்குகிறது! அப்படியே நீர்க் குமிழி தோன்றும்போது பார்ப்பவர் கண்

களைப் பறிக்கின்ற அழகு சொல்ல முடியுமா? புலவர்களும் அதனைப் பாட்டில் வருணித்திருக்கிறார்களே! ஆனால் சூரியனைக் கண்டவுடன் பனி நீர் என்னவாயிற்று! காற்று நின்றவுடன் குமிழியின் நிலை என்ன! அதுபோல மக்கள் வாழ்வு எமன் வருகிறவரையில் அழகாகவும், இன்பமாகவும் தோன்றுகிறது; அப்புறம் எப்புறமோ! யார் அறிவார்! போனவர் திரும்பியதில்லை; திரும்பியவர் போனதில்லை. இதிலோ பேதை மாந்தர் ஆகாயத்தில் இறக்கை கட்டிப் பறக்கவேண்டும் என்கின்றனர்! அப்படிக் கோட்டை கட்டிப் பறந்த திரிபுராதியர் வாழ்வு நின்றதா என்பதை அவர் நினைப்பதில்லை! இவர்கள் ' நரிவாலைக் கொண்டு கடலாழம் பார்ப்பது' போல ஐம்பெரும் பூதங்களும் தமக்கு ஏவல் செய்யவேண்டுமென்று எண்ணாது எண்ணி மனம் புண்ணாவர். அப்படி ஐம் பூதங்களையும் ஏவல் கொண்ட இரணியன், இராவணன், பதுமாசுரன் முதலியோர் எங்கே? ஒருவரையும் காணோமே! ஒரு குடை நிழற்கீழ் உலகம் முழுவதும் ஆளும் சக்கிரவர்த்திக்கும் உண்பது நாழி, உடுப்பது நான்கு முழமே. அவனும் பொன்னையும், மணியையும் உண்ண முடியாது; பனி நீரைப் பருக முடியாது. எல்லாம் யோசிக்கும் வேளையிற் பசி தீர உண்பதும் உறங்குவதுமாக முடியும்,'' என்று இவ்வாறு நெடுநேரம்

சிந்தித்து, "நல்லது; என் தம்பியே இவ்வரசைக் கட்டியாள்க; நான் ஆண்டது போதும்; நான் காட்டுக்குச் சென்று, காய் கனி உண்டு, கடவுளைத் தொழுது காலங் கழிப்பேன்," என்றபோது ஒரு நினைவு தோன்ற, அவர் கண்மலர்கள் முத்தை உதிர்த்தன. "அந்தோ! அருந்தமிழ்ப் புலவர்கள் என்ன செய்வார்கள்! என் கையையே மேகத்தைப் பார்க்கும் பயிர் போலப் பார்த்திருந்த ஏழைகள் என்ன செய்வார்கள்! அவர்கள் நிலை மிகவும் வருந்தத்தக்கது. ஆயினும் என்ன செய்வேன்? கடவுள் கருணையே வடிவானவர். அவரே அவர்களைக் காப்பாற்ற வேண்டும்; தம்பிக்கு நல்ல அறிவைக் கொடுத்து அவர்கள் எல்லாரையும் காப்பாற்றுவார்," என்றெண்ணி முடிவாக ஒருவருக்கும் கூறாமல் காட்டுக்குச் சென்றான். அங்கே பசிப்பிணி என்னும் பாவி தோன்றுவாளாயின், இலைகளையும், தளிர்களையும், காய் கிழங்குகளையும் உண்டு பசி தணிப்பான்; சுனை நீரை அள்ளிப் பருகி மனம் ஆறுவான். இங்ஙனம் குமணன் பல நாட்கள் அங்கே உறைந்தனன்.

குமண மன்னன் காடு பற்றினன் என்ற செய்தி பொழுது வெள்ளெனப் புலர்ந்ததும் பொள்ளெனப் புலப்பட்டது. இளங்குமணன் பெருங்களிப்புடன் தமயன் தனக்கு அஞ்சி ஓடிவிட்டதாக எண்ணி நாடு கைப்பற்றினன்; நாவி

தனுக்கும், முடிவு இனிதானதால் பல பொருள் வழங்கினான்; பின் அரசு கட்டில் ஏறினான். அது 'சிங்கமிருந்த இடத்திலே சிறிய நாய் இருப்பது' போல இருந்தது; 'பொன்னிறமுடைய அன்னம் வீற்றிருந்த தாமரை மலரிலே கருநிற முடைய காகம் இருப்பது' போல இருந்தது. அவன் பிடித்த செங்கோல் குருடன் கண்ணாடியைச் சுமந்ததுபோ லிருந்தது.

அறத்தின் தாயாகிய குமணன் காடு சென்றான் என்றது கேட்ட நகர மாந்தர் கண்ணீர் விட்டழுதனர். இராமபிரான் காட்டுக்குச் சென்ற போது அயோத்தி நகரம் பாழ்பட்டது போல அவன் நகரம் பொலி வழிந்தது. புலவர், 'தமிழ்ப் புலமை செத்த' தென்றனர். பாவலர், 'எங்கள் வாயில் மண் விழுந்த' தென்றனர்; இரவலர் 'இனி என் செய்வோம்' என்றேங்கினர். பாவை மார் 'எங்கள் கற்பு நிலை குலையும்' என்றனர். சான்றோர், 'இனிச் செங்கோல் கொடுங்கோலே' என்றனர். குமணன் காடு சென்றது அறியாத பலர் அங்கே வந்தனர்; அவர்களை யெல்லாம் இளங்குமணன் வெருட்டி ஓட்டினான்.

பின்னர் அவன் சில கட்டளைகளைத் தனது நாட்டிலே பிறப்பித்தான். அவற்றுள் முதலாவது: புலவர், பரிசில் பெறுவோர் முதலிய யாரும் தன் நாட்டுக்குள் அடியெடுத்து வைக்கக்கூடாது

என்பதாம்; அப்படிக்கின்றித் தவறி வந்து விட்டால் அவர்கள் மேலிருக்கும் ஆடை ஆபரணங்கள் பறிக்கப்படும் என்றும், சட்டம் ஏற்படுத்தினான். இரண்டாவது கட்டளை: தனது நாட்டிலே புகழ்வோர் ஒருவரும் இருக்கக் கூடாதென்றும், பொய்ப் புகழ்ச்சியால் உலகம் கெடுகிறதென்றும், அப்படிக் கட்டளை மீறி யாரேனும் ஒருவர் மற்றொருவரைப் புகழ்ந்தால் அவர் உரிய பொருள் பறிமுதல் செய்யப்படும் என்றும் பிறப்பித்தான். மூன்றாவதாகத் தன் தமையன் உயிரோடு இருக்கும் வரையில் தனக்கு அரசு தக்காதென்று எண்ணித் தன் தமையன் தலையைக் கொண்டுவருபவர் யாராக இருந்தாலும் அவருக்குக் கோடி பொன் அளிக்கப்படும் எனவும் பறை சாற்றினான். இக் கொடு மொழியைப் புண்ணிலே புளிவிட்டது போலக் கேட்ட நகரமாக்கள் அமணனைத் தூற்றினார்கள்; கண்ணீரை ஊற்றினார்கள். இங்ஙனம் பல பகல் ஒழிந்தன.

பெருந்தலைச் சாத்தனார் என்னும் அரும் புலவர் ஒருவர் இருந்தார். அவருக்குக் குமணன் செயல் ஒன்றும் தெரியாது. அவர் வறுமையையே தமக்கு உரிமையாகப் பெற்றவர். எத்தனையோ நாளாக-மாதங்களாக-ஆண்டுகளாகக் குமணனைக் காணவேண்டுமென்று இருந்தவர்; 'நாளை போகலாம், பின்னை போகலாம்' என்று கடத்திவிட்டார்;

வறுமையாகிய நஞ்சு தலைக்கேறிற்று. அதன்மேல் அவர் நல்ல நாளும் நிமித்தமும் பார்த்துக் கொண்டு புறப்பட்டார். குமணன் நகர் எல்லையிலேயே எல்லாவற்றையும் அறிந்துகொண்டார். அதன்மேல் குமண மன்னனைக் காட்டிற்காவது போய்ப் பார்க்க வேண்டுமென்று அங்கிருந்தவர்களை, 'அவர் இருப்பிடம் எங்கே' என்று வினவினார். அவர்கள், "ஐயா, அங்கே போய் என்ன பயன்? பேசாமல் திரும்பிப் போம்," என்றனர். அதற்கு அவர்களை நோக்கி, "ஐயன்மீர், புலிக்குத் தன்காடு புறங்காடு இல்லை. நான் போய் அவரைப் பார்த்துவிட்டுத்தான் மீள்வேன்," என்று கூறிவிட்டு அவனைப் போய்க் காட்டிலே கண்டார். கண்டவர் அவனை நோக்கி, "குமண வள்ளலே, என் வீட்டிலே அடுப்புமூட்டி நெடுநாளானதால் அங்கே காளான் பூத்திருக்கிறது; என் மனைவியின் மார்பு பால் சுரப்பற்றது; என் குழந்தை மார்பைச் சுவைத்துச் சுவைத்துப் பால் காணாமல் அழுகின்றது. அக் குழவியின் முகத்தைப் பார்த்து, என் மனைவி கண்ணீர் சொரிந்து கலுழ்கின்றாள்; அவள் வருத்தத்தைப் பார்த்து அதைத் தீர்க்கும் உரிமையுடையாய் என்று நினைத்து உன்னிடம் வந்தேன்; உன்னிடம் எப்படியாவது பரிசில் கொள்ளாதுவிடேன்," என்று உருக்கமாக,

"ஆடு நனி மறந்த கோடு உயர் அடுப்பின்
ஆம்பி பூப்பத் தேம்புபசி உழவாப்
பாஅல் இன்மையின் தோலொடு திரங்கி
இல்லி தூர்ந்த பொல்லா வறுமுலை
சுவைத்தொறு அழூஉம்தன் மகத்துமுகம் நோக்கி
நீரொடு நிறைந்த ஈர்இதழ் மழைக்கண்என்
மனையோள் எவ்வம் நோக்கி நினைஇ
நிற்படர்ந் திசினே நற்போர்க் குமண,
என் நிலை அறிந்தனை ஆயின் இந்நிலைத்
தொடுத்தும் கொள்ளாது அமையலென் அடுக்கிய
பண்அமை நரம்பின் பச்சை நல்யாழ்
மண்ணமை முழவின் வயிரியர்
இன்மை தீர்க்குங் குடிப்பிறந் தோயே."

என்று ஒரு பாட்டுப் பாடினார்.

அதைக் கேட்ட கோமான் மனம் வருந்தி,

"அந்த நாள் வந்திலை அருந்தமிழ்ப் புலவோய்,
இந்த நாள் வந்துநீ நொந்தெனை அடைந்தாய்."

"ஐயோ! புலவரே, நான் ஆண்டிருந்த நாளிலே வந்திருந்தால் எவ்வளவு பொருள் வழங்கி இருப்பேன்! ஒன்றும் இல்லாது வெறுங்கையோடு இருக்கும் இந்த நாளிலே வந்தீரே!" என்று பழைய நினைவை எண்ணி வருந்திச் சொன்ன அளவிலே அவர்,

"ஆறுபெருக் கில்லா தருந்திடர்தான் பட்டாலும்
ஊறல் அமையாதோ உலகாற்றத்—தேற

வறியையே ஆனாலும் என்வறுமை தீர்க்கச்
சிறியையோ சீர்க்குமணா செப்பு."

என்ற பாட்டைப் பாடி, "வள்ளற் பெருமானே, ஆறுபெருக்கு ஒழிந்த போதும், உலகத்தார் வேட்கையைத் தணிப்பதற்கு அதன் ஊற்று நீர் போதாதோ! அதுபோல என்னுடைய வறுமையைத் தீர்ப்பதற்கு நீ சிறியவனோ!" என்று நயமாக மொழிந்தனர். அதைக் கேட்ட அரசன் மனம் வருந்தித் தனது நாடு இழந்ததைக் காட்டிலும் இது பொல்லாதது எனக் கூறினான்; தனது கைவாளை எடுத்துப் புலவர் கையிலே கொடுத்து,

" தலைதனைக் கொடுபோய்த் தம்பிகைக் கொடுத்ததன்
விலைதனைப் பெற்றுன் வறுமை நோய் களையே."

"புலவர் பெருமானே, என் தம்பி மிகவும் நல்லவன்; அவன் எனது புலால் கமழும் புன் தலைக்கும் கோடி பொன் கொடுப்பதாகப் பறை சாற்றியிருக்கிறான். ஆதலால், நீர் இவ் வாளால் என் தலையை வெட்டி அவனிடம் கொடுத்து உமது வறுமை நோயைத் தீர்த்துக்கொள்க," என்றனன்.

அதை இரண்டு செவிகளும் சுடும்படி கேட்ட சாத்தனார், "அம்மம்மா! கொடிது! கொடிது! நான் ஒரு சூழ்ச்சி செய்யவேண்டும். அதற்காகத

தம்முடைய வாள் மட்டும் எனக்கு வேண்டும்,'' என்று கூறிவிட்டுக் குமணனிடம் விடைபெற்றுச் சென்றார். சென்றவர் மாங்காதை என்னும் ஊரிலே சிற்ப சாத்திரத்திலே வல்லவனும், அரசர் மகுடஞ் செய்பவனுமாகிய கொல்லன் ஒருவனைக்கண்டார். அவனைக் குமண மன்னன் தலைபோலச் செய்து கொடுக்கும்படி வேண்டினார். அவனும் தமிழருமைக்காக, அதற்கிசைந்து செவ்வாழை மரத்தண்டிலே பொய்த்தலை ஒன்று செய்தான். அது மெய்த்தலையைப்போலவே தோன்றிற்று. புலவருக்கு அடங்காத உவகை உண்டாகிவிட்டது. அதனைப் பெற்றுக்கொண்டு அவனைப் பார்த்து,

'மாங்கைதயிலே வாழும் மகுடத் தியாகி உனக்
கேந்து தழும்போ இரண்டுண்டு—வேந்தர்
*முடித்தழும்புன் காலிலே முத்தமிழோர்க் கீயும்
படித்தழும்புன் கையிலே பார்.'

"மகுடத்தைத் தானம் செய்பவனே, உனக்கு இரண்டு தழும்புகள் உண்டு. ஒன்று உன் காலிலே உள்ளது; அது மன்னர் முடித்தழும்பு; மற்றொன்று கையிலே உள்ளது; அது புலவருக்கு அளந்து ஈவதால் உண்டாகும் படித்தழும்பு,'' என்று சிறப்பாகக் கூறினார்.

---

*வேந்தர் முடித்தழும்பு காலில் என்றது முடியைச் செய்யும்போது அது காலிலே படுவதால் உண்டாவது.

அதன்மேல் புலவர் இளங் குமணனுக்குத் தாம் குமண வள்ளலுடைய தலையைக் கொண்டு வந்ததாகத் தெரிவித்தார். அதைக் கேட்ட அமணன், புலவர் வருகையை எமன் வருகை போலக் கொண்டு, அவரை ஊருக்கு ஐங்காதம் வரையில் வரவிடக் கூடாது என்ற எண்ணம் உடையவனாக இருந்தும், தமயன் தலையைக் கொண்டு வந்தார் என்ற மகிழ்ச்சியால் அவரை வரவிட்டான். அவர் அப் பொய்த் தலையை ஒரு மெல்லிய துணியால் மூடியிருந்தார்; பசுங் குருதி வடிவது போல அது செய்யப்பட்டிருந்தது. கழுத்தில் ஓடிய நரம்பு நன்றாகப் பார்ப்பவருக்குத் தெரிந்தது. குடுமி மயிர் அங்கு மிங்கும் திரிந்திருந்தது. அதைப் புலவர் அமணனுக்குக் காட்டினார். அதைப் பார்த்தவுடனே அமணனுக்குச் சகோதரபாசம் வந்துவிட்டது. தன்னை மறந்தான்; அவன் கெட்ட எண்ணங்கள் எல்லாம் மறைந்தன; அவன் உடம்பு துடித்தது; வயிறு குழம்பிற்று; உதிரம் கொதித்தது. சிங்காதனத்திலிருந்து மகுடமும் வாளும் அற்றுவீழக் கீழே விழுந்தான். "ஐயோ! நான் என்ன செய்வேன்! அண்ணாவோ! அண்ணாவோ! நீ எங்கே சென்றாய்? உன் திரு முகத்தை இப்பாவி கண்ணால் எப்பொழுது பார்ப்பேன்? உன் அருள் பொழியும் விழி எங்கே? உன் பொருள் மொழியும் செவ்

வாய் எங்கே? உன் கொடை சுரக்குந் தடங் கைம் மலர் எங்கே? அந்தோ! உன்னைவிட்டு எப்படிப் பிரிந்திருப்பேன்! நீ காட்டிலே இருந்தாலும் நன்ருக உயிரோடு இருக்கிருய் என்றிருந்தேனே! இக்கொலைப் பாதகன் உன்னைக் கொன்ருனே!" என்று வாளை யுருவிக்கொண்டு புலவரை வெட்ட ஓடிவந்தான். புலவர், சிங்கத்தைத் கண்ட யானை போலப் பதுங்கிக் கொண்டார். அமைச்சர் அமணனைத் தடுத்தனர். அவன் சோர்ந்து விழுந்தான்; புரண்டான். அப்போது புலவர் மெதுவாக, "மன்னர் மன்ன, குமண வள்ளலை நான் உயிர்ப்பிக்கின்றேன். நீர் என்ன தருவிர்?" என்று கேட்டார்.

அதுகேட்ட அமணன் துண்ணென எழுந்தான்; "நான் என் தமயனைக் காண்பேனு?" என்று கதறினன். புலவர், "உண்மையாய் உம் தமயனுரை உயிருடன் உனக்குக் காட்டுவேன்," என்ருர். "அப்படியானல் உமக்குக் கோடி பொன்னும் தருவேன்; என் தமயனுருக்கு இவ் வரசையுங் கொடுப்பேன்; அவர் காலால் இட்ட வேலையைக் கையாற் செய்து வாழ்வேன்," என்ருன்.

அவ்வாறே செய்வதாகப் புலவர் உறுதி சொல்லிவிட்டு அப்புறம் அகன்ருர்; குமணவள்ளலைக் களிப்புத்துள்ள விரைந்து சென்று கண்டார்.

நிகழ்ந்தவற்றை யெல்லாம் அவருக்கு நவின்றார். குமணன் அவ்வளவு முயன்ற புலவர் பொருட்டு அவர் பின்னே தொடர்ந்து வந்தான். இளங் குமணன் வரிசை விருதுகளுடன் எதிர் வந்து தன் தமயன் திருவடிகளைப் பற்றிக்கொண்டு அழு தான். குமணன் அவனைத் தழுவி அன்புக் கண் ணீர் சொரிந்தான். இவ்விருவரும் இங்ஙனம் இருந்த காட்சி இராமனைப் பரதன் பஞ்சவடியிற் கண்டது போலக் காணப்பட்டது. எல்லாரும் களி துளும்பினர்.

குமண வேந்தன் இளவலோடு தனது நாட்டை அடைந்தான். தம்பி இளவரசுப்பட் டம் பெற்று அவனுக்குத் 'தம்பியுடையான் படைக்கஞ்சான்,' என்னும் பழமொழிக் கிணங்கத் துணையாக இருந்தான். குமணவள்ளலும் சந் தனம் தேயுந்தோறும் மணந்தருவது போலவும், செம்பொன் சுடுந்தோறும் ஒளிர்வது போலவும் தனது கொடைத் தொழிலைக் குன்றாது இடை விடாது நடத்தி இனிது வாழ்ந்து வந்தான்.



---

# அருள்

அருளே இறைவன் அருந்திரு மேனி;
அருளே இன்பம் துன்பிலும் அளிப்பது;
அருளே வீட்டை அளிக்குந் துணைவன்;
அருளே செல்வம் அனைத்தினும் உயர்ந்தது;
அருளிலார்க் கவ்வுல கில்லை இல்லை.
அதுவே, மழைபோல் எல்லாம் வரையா தளிப்பது;
பிழைபோல் ஒன்றும் பேசா திருப்பது;
இம்மை மறுமை இனிதின் ஈவது;
நம்மை நல்வழி நயக்கச் செய்வது;
பசியால் நோயால் பகையால் பிறவால்
நசியா உயிர்க்குக் கசியா திருப்பது;
கொல்லு வோர்க்குங் குணத்தைக் கொடுப்பது;
நல்லது பிறப்பென நயக்கச் செய்வது.
அன்பின் மகவு; அருங்கொடைக் கீன்றாள்;
இன்பின் துணைவன்; இழப்புக் காசான்;
பெறுவ துண்டெனின் பெறுக அருளே;
உறுவ துண்டு உண்மை
பிறவா இறவா பெருநிலை யதுவே!

மணி. திருநாவுக்கரசன்.



Kesari Printing Works, Madras.